உ

திருச்சிற்றம்பலம்.

# சேடசுரர் மாலை.











ஈரோடு

ஸென்டால் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

1896.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஈரோடென்று வழங்கின்ற மந்தியபுரியிலெழுந்தருளிய

# சேடேசுரக்கடவுள் பேரில் மாலை.

இஃது

கோயமுத்தூர் ஜில்லா ஈரோட் தாலூக்கா அவல்பூந்
துறைக்கிராமம் தொட்டியபாளையத்துக்கடுத்த திரு
ஞானசம்மந்தபுரத்திலிருக்கும் முத்துச்சாமி
பிள்ளையவர்கள் குமாரன்

## வேலாயுதம் பிள்ளையவர்களால்

இயற்றப்பட்டது.

ஈரோடு பஞ்சமண்டி முருங்கைத் தொழுவு
சி. சுப்பராயசெட்டியாரவர்கள் குமாரன்

## சிவராமசெட்டியாரவர்கள்

கேட்டுக்கொண்டபடிக்கு

ஈரோடு.

சென்ட்றல் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

(:ο:)

1896

அ///

# சாற்றுக்கவிகள்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

கயிலாச பரம்பரை மதுரை ஆதீனத்துச்சிஷர்களிலொருவ ராகிய பூந்துறைத்தமிழ் புலமை நடாத்திய காழிமுத்து கவிராயரவர்கள் குமாரன் குழந்தைவேற் கவிராயரவர்களாலியற்றியது.

வெண்பா.

ஆறுபத்துமூவரடியார் சரித்திரமும்
ஆறுபத்துநாலு விளையாடலையும் றூறுபெற்ற
மாலையான்று பாடினன் மன்னுஞ் சேடசுரர்மேற்
சிலன் வேலாயுதமா மேறாந்து.

அரவாபரண னீரோடைச் சேடசுரற் கன்புடனே
சிரமாலைசூட்ட கவியொருறூறுஞ் செழுந்தமிழால்ச்
சரமாரிச்சாதியிற் பெய்ததுபோலத் தவமிகுத்த
குரவோர்கள் போற்றிட வேலாயுதம்பிள்ளை கூறினனே

அரங்கேற்றியகாலம்.

துதிபரவு கலியுக நாலாயிரத் தொளாயிரத் தொண்ணூற்றி யேழ்மன்
மதவாண்டு மீனரவி தேதிபதினர் சுக்கிரவாரம பூரம்
நதிபரவு மீரோடைச்சேடசர் மேற்றமிழ்மாலை நலமாய் வேலா
யுதகவிஞன் றெய்வனுயகப்பிறபு அவைகளத்திலுரைத்திட்டானே.

ஷையார் தலைமயன் சுந்தரம்பிள்ளை அவர்களாலியற்றிய

வெண்பா.

அண்ணல் சொக்கேச ரருள்விளையாட்டின் கதையும்
பண்ணுமடியார் பனுவல்களும் திண்ணமதாய்
சேடசர்மாலை சிவஞான வேற்கவிஞன்
பாடினனிப்புவியிற் பார்.

கலித்துறை.

திருவிளையாட லறுபதது நான்குஞ் சேர்ந்துசிவ
னுருவிளையாடுஞ் சிவனடியார்களுடன் சர்தை
தெருளுறவாய்ந்த வேலாயுதநாவலஞ் செந்தமிழால்
மருமலர்சூடிய சேடசர்மாலை வழுத்தினனே.

வெள்ளோடு புலவர்பாளையத்திலிருக்கும் குமாரசாமிப்புலவர்
குமாரன் சாமிநாதப்புலவரவர்களியற்றிய
வெண்பா.

செய்யதிரு வீரோடைச் சேடசர் தன்மீதில்
துய்யதமிழ் மாலைதனைச்சூட்டினான் வையமதில்
வண்மை யிலக்கண நூல வாசிந்தரும்பொருள்சேர்ந்
துண்மைநண்ட வேலாயுதம்.

கலித்துறை.

மணிகொண்ட மாமுடிச்சோழனுக்கே பொன்மலர் மழையும்
அணிகொண்டு பெய்கின்ற ஈரோடை மாநகராம் பதியில்
பணிகொண்ட சேடசர்தன்மீதில் மாலையைப்பாடல் செய்தான்
மணிகொண்ட வேலாயுதம்பிள்ளை காவலன் மாநிலத்தே.

———— ◦:0:◦ ————

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சேடசுரக்கடவுள் பேரில் மாலை.

விநாயகக்கடவுள் துதி.

வெண்பா.

பொன்மாரிபெய்த புனிதமிகு மீரோடை
தன்னில்வளர் சேடசர்தன்மீதில் நன்மைமிகு
செந்தமிழால் மாலைதனைச்செப்பக் கரிமுகவன்
கந்தமலர்ச் செஞ்சரணங் காப்பு.

முருகக்கடவுள் துதி.

அன்பெறு நன்மலர்பாத்துமகாவெனு மோர்நாரிவிசைத்தருள் சேர்மாலை
முன்பெரியவன்பாமொழி யேற்றதிருசெவியதனில் மூடனாயே
னுன் பதுமமருச்செக்குமுருதியில் புனமொழியேற்க வுதவிசெய்வா
யன்பருளகுடிகொண்ட தென்பழனிமுருகோனே யமரரேறே.

சான்றோர் துதி.

இனியதே மிசைக்குங் குயின்முனே
தனியோர்காகஞ்செய் தன்னிசையென்னவே
கனிவுஞானக்கருத்து மிகுவர்முன்
பனுவலென்று பகர்ந்த னளபேதையே
அருந்தவத்தன ரற்சிகு நன்மலர்ப்
பொருந்துநாமெனப் பூவுலகத்தினிற்
றிருத்துநாவலர் சவையிலென் மொழி
பெருமைகொண்டு பிரபலமாகுமே.

எழுசீர்க்கழிநெடிலாசிரியம்.

ஆரணன்முதலாயந்தரர்முனிவ ரவனியோர்நிதம்நினைந்துருகிப்
பாரினிலுனதுபதமலர்காணார் பாவியான்காணுதற்கெளிதோ
பூரணமுதலேயேழைமேற்கிருபை புரிந்தருள் கொடுப்பதென்றுளோ
காரணமிகுந்தமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே 1

சிரிலங்கிடுமென்மௌலியுஞ்சடையுந் திகழ்நதிக்கொன்றையுமறுகு
பார்புகழ்மதியுமததநீற்றொளியும் பாக்கருள்பூத்தமுக்கண்ணுந்
தார்புனைமார்புமெண்காதழகுந் தாளிணைகாணவருள்தா
கார்பொழில்சூழ்மத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 2

புண்ணியமிகுந்தமுதலுகத்தவர்கள் புகழுமாதேவாயிரண்டி
லெண்ணியவரங்களிக்குஞ்சோமேச னென்னவுமுன்றெனுமுகத்தில்
விண்ணவர்புகழுநாமதீசுரனாய் விளங்கியதேவனே அருள்தா
கண்ணுவர்வணங்குமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே 3

அனைவரும்புகழச்சேடன்பூசித்த தாலையால்கலியில்சேடீச
னெனவுநன்றுமம்பசடறுமராச னியற்றியதவத்தினுக்கிரங்கி
மனமதுமகிழப்புத்திரனளித்த வள்ளலேசிறியனுக்கருள்தா
கனகமேமிகுந்தமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 4

விந்தையாருந்தரகபாலநற்புரியாய் மெய்மிகுமத்தியபுரியா
யந்தணர்சூழ்சேடப்புரியெனவு மழகுயர்பதியில்வாழுமசே
சந்ததமுனதுபதமலர்மரவேன் தயைசெய்துகாப்பதென்றுளோ
கந்தமுமிகுந்தமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 5

அத்திநேர்வலியபுயமிகுமரக்கனு ருத்திரன்சிரமதைவாழாற்
கொதத்தியேபுவியில்விழ்த்தியசமர்த்தி கொங்கலாதேவியுஞ்சூழ்ந்து
நித்தியம்வணங்கவருளதுதந்த நிமலனேசிறியனுக்கருள்தா
கத்தியர்வணங்குமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 6

நற்பதமீயுங்காசிமாகாஞ்சி நலங்கொள்கோகரணமும்புலியூர்
விற்பனமிகுந்தகுடந்தைமாயூர மெய்யுயர்விமுக்தபநடுவாய்
சற்சனர்சூழுங்கொங்கினில்வாந் தலத்தனேசிறியனுக்கருள்தா
கற்பனைமிகுந்தமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 7

சிலமேமிகுந்தசேடன்பூசித்த செய்கையால்சேடியம்புரியாங்
கோலமாமறையோனபிரமபந்தென்போன் கோநிலாகாட்சிகண்டயந்தான்
மேலகாமிரவிகுமபத்தில்வணங்கு மெய்யனேயேழையைக்காப்பாய்
காலனும்போற்றுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 8

பெருமைசேர்சேடிபுரியின்முன்பாகப் பெருநதிகாவேரியின்மூழ்கி
அருளையோஞ்சோமகனப்பிரசேச மதில்வில்வமர்ச்சிக்கதொழுவோ
ரருண்மிகுசதந்தேவாண்டுமெண்செல்வ ராயுய்வரெனமறையுமொழியுங்
கருணைதந்தெனைக்கார்மத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 9

விந்தையாங்கிராமப்பிரதிஷ்டைசெய்து மேலுமாலயப்பணிநடத்தி
சொந்தனைவேதவியமிபாவுந் தைமாதந்துசங்கொடிபூசத்தில்தமு
மந்தணர்புகழ்காவிரியினீர்நடத்து மரசனைக்காத்தவாஅருள்தா
கந்தவேள்போற்றுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 10

### சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

சுந்தரமதனைச்சுந்தராக்கித் தொல்புவியோரெலாமறிய
விந்தையாமணத்திற்சாசனங்காட்டி விரிமலர்ப்பாதமுஞ்சூட்டி
சந்ததந்தமிழ்வேதங்கள்சொல்லென்ற தயாபராசிறியனுக்கருள்தா
சந்தன்மால்சூழமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 11

### தில்லைவாழந்தணர்.

ஆதியிற்கைலைதன்னிலேயிருந்த வருந்தவக்கணங்களையடியார்
நீதியின்பொருட்டாய்த்தில்லையந் தணராய்ச்சமைத்துத்திருத்தமூலகாட்டுஞ்
சோதியேயுனதுபொற்கழலையாமேவன் தூயநின்பதமலரருள்வாய்
காதியர்வணங்குமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 12

### திருநீலகண்டநாயனார்.

நஞ்சணிகண்டம்பொருளெனக்கருதும் நாயனார்மனைவியின்மொழியா
லஞ்சித்தொண்ணூற்றாண்டினைக்கழிக்கு மவர்மனஞ்சோதித்து மவர்க்குக்
குஞ்சிதபாதமருளுமெஞ்ஞானக் குருபராயேழையைக்காப்பாய்
கஞ்சமதிலங்குமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 13

### இயற்பகைநாயனார்.

பதியருள்பெற்றோரியம்பிடுமொழியைப் பாக்கியமென்னவேகருதி
நிதிதினமாராதளித்தநற்றாயர் நெஞ்சினைச்சோதித்துமவர்தன்
மதியினேர்பணியுமாதினைவாங்கி மலரடிதந்தவாஅருள்தா
கதியினர்சூழமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 14

### இளையான்குடிமாறநாயனார்.

விமலனாரடியார்விருந்துணவிரவில் வெருட்டிடுங்கங்குலிற்சென்று
அமலம்நீக்குவர்போல்சாலிசேர்நீக்கி யடியவள்கையினிற்கொடுத்துச்
சமையல்செயதெழுப்பச்சோதியாயெழுந்த தயாபராசிறியனுக்கருள்தா
கமலையள்சூழமததியபுரிவாழ் கற்தனே சேடயீசுரனே. 15

### மெய்ப்பொருணாயனார்.

சமரினிற்பயங்கோனடியவர்வேடந் தான்கொண்டுஆயுதமறைத்து
விமலனாருருஞ்சுருதியாமென்று விளம்பியேகந்தரமருக்கத்
தமரெலாமுனியத்தடுத்தவர்க்கருளைத் தந்தவாசிறியனுக்கருள்தா
கமனியர்சூழமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 16

## விறன்மிண்டநாயனுர்.

ஆயமேலாடன்பர்கன்னேமுன்னிறைஞ்சி யதன்பினேயாலயம்புகுவார்
நாவலூரான்பர்தனேப்புறமென்னலமிகுந் தொகைசொலமகிழ்ந்த
காவலன்றனக்குப்பதமலரீந்த காரணுமிறியவுக்கருள்தா
காவிரிசூழமத்தியபுரிவாழ் கற்தனேமேசெடீயீசுரனே. 17

## அமர்நீதிநாயனுர்.

திருவளர்நல்லூருற்சவங்காணுஞ் சிவனடியார்களுக்குணவு
பெருமையாயளித்தயடியவருளத்தைப் பேதித்துக்கந்தையால்மாட்டிக்
கருணையாற்றுலேமேற்காட் சிதந்தருளுங் காரணுமேழையைக்காப்பாய்
கருவிகள்மிகுந்தமத்தியபுரிவாழ் கற்தனேசேடீயீசுரனே. 18

## எறிபத்தநாயனுர்,

அங்கணரடியாராபத்துக்குதவு மடிகள்நாமென்றுசந்திருத்திச்
செங்கையில்மழுக்கொண்டானேயைத்துணித்துச் சேனேயோடெதிர்வருஞ்
(சோழ)
னிங்கிதமொழியாற்கந்தரமரிந்தார்க் கிணையடிதந்தவாஅருள்தா
கங்கைநீர்சூழமத்தியபுரிவாழ் கற்தனேசேடீயீசுரனே, 19

## ஏனுதிநாயனுர்.

மனதினிலுறுபாசந்தனேயகற்று மன்பர்பால்சூரனுமெகிர்த்துச்
சினமொடுபொருதித்தோல்வியால்வேடஞ் செய்தவனீற்றெளிகண்டு
அனவரில்மேலாமடியமென்றஞ்ச மடிடரைக்காத்தவாஅருள்தா
கனமணிசூழமத்தியபுரிவாழ் கற்தனேசேடீயீசுரனே 20

## கண்ணப்பநாயனுர்.

எண்ணிலாவன்பேரிதையத்திற்பொங்கு மென்னப்பனீந்திடுமுனேப்
புண்ணியவமுதத்தினிதெனப் பொசித்துப்பூசனையர்வதுதிரக
கண்ணினிற்குருதிகாட்டியேகருணேக காட்சிகள்தந்தவாஅருள்தா
கண்ணன்சூழ்ந்திறைஞ்சுமத்தியபுரிவாழ் கற்தனேசேடீயீசுரனே 21

## குங்கிலியக்கலயநாயனுர்.

கயல்விழிமாதுபாகனுர்தம்மைக் கருதியேநறும்புகையிந்த
சயலக்கோர்புபக்தான்மிடியிஞல்வருந்திக் தன்மனைநானிணைவிற்குஞ்
செயலினேக்கருதிக்குங்கில்யமீந்துஞ் சேவடிதந்தவாஅருள்தா
கயவரைவெருட்டுமத்தியபுரிவாழ் கற்தனேசேடீயீசுரனே, 22

## மானக்கஞ்சாறநாயனார்.

பழவினையகற்றுமடியவர்தனது பத்தினியாளொடுமுனது
கழலிணைவணங்கிவிரதமுங்கொண்ட கருத்தறிந்தவர்மனங்களிக்கக்
குழலியொன்றீந்துமனத்தினிற்சிகை கைக்கொண்டருள்தந்தவாஅருள்தா
கழனிகள்சூழுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 23

## அரிவாட்டநாயனார்.

தற்பரனமுதுசெய்திடவேண்டித் தண்டலஞ்சென்னெல்செங்கீரை
அற்பமாவடுவுஅனுதினமீந்த வன்பரைவறுமையால்மிரட்டிச்
சற்பனைத்தமரிற்செங்கையாற்பிடித்துத் தாளிணைதந்தவாஅருள்தா
கற்பமதென்னுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 24

## ஆயநாயனார்.

விற்பனமாகவேய்குழலூதி விருப்பொடுமாவினமேய்த்துத்
தற்பரனடியைக்காணவென்றழைத்த தயவுளான்கண்களிகூறப்
பொற்பதங்காட்டிக்கதியினையீந்த புண்ணியாநின்பதமருள்வாய்
கற்பகஞ்சூழுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 25

## மூர்த்திநாயனார்.

ஆரமதணியுமரனருள்பெறவே யாரமதரைத்தெனுட்கொடுத்த
தீரனைச்சமணவரசனுங்கொடுமை செய்ததாலவனையும்வீழ்த்திப்
பாரினையாழவருளதுதந்தும் பரகதிதந்தவாஅருள்தா
காரெனவுதவுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 26

## முருகநாயனார்.

நம்பெருமானின்கழல்பெறவேண்டி நான்வகைமலரிலாராய்ந்து
தம்மனமுவகைபூத்திடுமலர்கள் தான்கொண்டுமாலைசெய்தீந்துஞ்
சம்மந்தர்நேசம்வைத்தவர்மணத்திற் றன்கலந்தாண்டவாஅருள்தா
கம்மெனச்சொல்லுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 27

## உருத்திரபசுபதிநாயனார்.

ஆலமதணிந்தவையநின்பாதத் தாசையைவேண்டியேதினமு
மாலங்கந்தரத்தினளவிலேநின்று மகோசருத்திரமதைச்செபித்த
கோலமேகண்டுகழலிணையீந்த குருபராசிறியனுக்கருள்தா
காவிலிவணங்குமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே 28

### திருநாளைப்போவார்நாயனார்.

அனலிடுமெருகுதாமெனவுருகி யையநின்பதமலர்காணத்
தினமுளங்கொண்டவன்பர்க்கா நந்திதேவனைவிலக்கியுந்தில்லை
யனவர்க்குமுறைத்தவன்னியிலெழுந்தார்க் கருள்செய்தவண்ணலேயருள்தா
கனலிலென்றிறைஞ்சுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 29

### திருக்குறிப்புத்தொண்டநாயனார்.

சார்பெலாமன்பர்தன்னிடம்வைத்துத் தானவர்கந்தையையொளித்து
நேரதாய்தந்தவடியனைமழையில் நின்றவர்மனநினைவெருட்டப்
பாலெலாஞ்சக்கல்லினிற்றலையைப் படித்திடக்காத்தவாஅருள்தா
கார்குலித்தெழுந்தமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 30

### சண்டேசுரநாயனார்.

விச்லைதயாய்ப்பசுவைமேய்ப்பவனியமறு மிடர்கள்கண்டவன்றனையகற்றிச்
சொந்தமாய்க்காப்போனென மேய்த்துத் தூயதாமர்ச்சனைபுரிய
தந்தையுக்தவிரத்தமுவினைச்சிதைத்தோன் றனக்கருள்செய்தவாஅருள்தா
கந்தரம்படியுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 31

### திருநாவுக்கரசு சுவாமிகள்.

பாரினிலதிகபத்தியாலுயர்ந்த பாவைதன்வேண்டலின்படியே
வீரியமில்லாவமணரோயுற்ற வெந்தனையருள்வடிவாக்கி
மேரினிலுயரோலக்கமுங்காட்டு மெய்பனேயேழையேற்கருள்தா
காரிதாழ்ந்திறைஞ்சுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 32

### குலச்சிறைநாயனார்.

சிரிலங்கிடுநன்பாண்டிமாதேவி சிந்தைசேர்பலபணியியற்றி
நாரிலங்கிடுமெய்யமுதினையுண்டார் தன்னுடன்வாதினிற்றோர்த்த
சோரரைக்கழுவிலேற்றினார்க்கருளுந் தூயனேசிறியனுக்கருள்தா
காரியர்சூழுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 33

### பெருமிழலைக்குறும்பநாயனார்.

அதிகவம்புகள்செய்தொண்டனார்கழலை யருந்தவமாமெனநினைந்து
துதியினாலணிமாசித்திகள்பெற்றுத் தூயனாரானுரைகையிலைப்
பதியினுக்கேகுஞ்செயலறிந்துவந்தார் பதமலரேழையேற்கருள்தா
கதிரவன்வணங்குமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 34

காரைக்காலம்மையார்.

இன்னிலமதனிலெய்திடுமன்ப ரிதையமுமகிழவென் றுறும்
நன்னயவமுதுயழித்துமாங்கனியை நாதனுர்கிந்தருள்பெற்றப்
பொன்னனையாளின்காந்தனுமஞ்சப் பொன்னடிதந்தவா அருள்தா
கன்னல்கள்சூழுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 35

அப்பூதிநாயனர்.

தம்பிணையில்லார்தன்பெயராலே தருமடமமைததெதிர்நோக்க
அம்மடமதனிலடியவர்வந்துற்று மவர்மனையமுதுசெய்போழ்தில்
செம்மலுக்குயிருமவர்க்கருள்செய்யத் திருவருள்செய்தவா அருள்தா
கம்பியர்சூழும்மத்தியபுரிவாழ் கற்தனே சேடயீசுரனே 36

திருநீலநக்கநாயனா.

ஆவலோடன்பர்பாதமர்ச்சிக்கு மளவிலேசிலம்பிபொன்றுறவே
தாவியங்குமிழ்ந்தமனையனைவெருக்குந்தயவுளார்கனவின்கணெழுந்து
ஓவியமனையாள்செய்தல்நன்றென்று வுயர்கதிதந்தவா அருள்தா
காவலர்சூழுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 37

நமிநந்தியடிகணயனர்.

திருவருள்பெறவேயாலயம்பணிவார் தீங்குசெய்பமணர்கண்மொழியால்
பெருகுநீர்வார்த்துதீபமதேற்றிப்பின்னுமோனாயமுற்றுரைக்
கருணையாற்றவிர்த்துக்கழலிணைதந்த காரணபூரணஅருள்தா
கருதலர்வணங்குமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 38

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்.

அரியயனரியாவுருவினைமூன்று மாண்டினிற்கண்டன்னையிந்த
திருவமுதுண்டுதாளமும்வாங்கிச் சிவிகைமேலாலவாய்ச்சென்று
விரிதலையமணப்பிசாசினையோட்டும் வேந்தனைக்கார்த்தவா அருள்தா
கரியவன்வணங்குமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 39

ஏயர்கோன்கலிக்காமநாயனர்.

மேவுமெய்யடியார்பாவைபாற்றாது விமலனைவிடுத்ததங்கறிந்து
பாவியென்றிகழ்ந்தவன்பரைப்பொல்லாப் பாதகச்சூலையால்வருத்தி
யேவுதல்செய்தலறிந்துயரிறக்க வெழுப்பியுங்கார்ததவா அருள்தா
காவியஞ்சூழுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 40

### திருமூலநாயனார்.

ஆவுகள்மேய்ப்போனுலியுமிறக்க வங்குற்றார்பசுக்கள்சோர்வகற்றத்
தாவியகூடத்தினிருந்துமெய்யோகந் தானுற்றுமரியநற்பொருளாய்
பாவினாற்செய்துகைலையையடையப் பாகந்தந்தவா அருள்தா
காவுகளுறுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 41

### தண்டியடிகணாயனார்.

பயவிலாயகற்றும்பரமனாரடியார் பணிசெய்ததிருக்குளந்தடுத்த
சவமொறுமமணர்தங்கள்கண்மறைத்துத் தவத்தினர்தனக்குக்கண்ணளிந்து
புவியெலாமகிழவஞ்சகாகலப் பொன்னடிதந்தவா அருள்தா
கவிபினர்குழுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 42

### மூர்க்கநாயனார்.

சேவிலிலேறுஞ் சிவனடியார்க்காய்ச் சிலவுசெய்தரும்பொருளெல்லாந்
தாவியாரிடத்துஞ்சூதினுல்வென்று தனமெலாமன்பருக்குதவி
காவினூற்றுணர்த்தண்பரைக்கார்த்த நாயகாசிறியனுக்கருள்தா
காவிகள்குழுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீரனே. 43

### சோமாசிமாறநாயனார்.

நல்தரும்பெருமான்நற்கழல்பெறவென் றனுப்பஞ்சாக்கரஞ்செபித்துப்
பலமிகுமன்பர்க்கினியமுதளித்துப் பண்புளயாக முமியற்றித்
தலமிகுமாரூரடின்தாளடையத்தாளிணைதந்தவா அருள்தா
கலதியாளகுமத்தியபுரிவாழ் கற்தனெசெடயீகரனே 44

### சாக்கியநாயனார்.

புலானுடம்பிச்சையொழித்துமெஞ்ஞானம்புகுபவர்சாக்கியர்மொழியை
அலாதெனவெறுத்தவ்வடிவுடனன் பினுசையால்கல்லெடுத்தெறிந்து
மிலாதநாளுண்முன்விளார்தெழுந்தயர்ந்த வேந்தனைக்காத்தவா அருள்தா
கலாநிதியணியுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 45

### சிறப்புலிநாயனார்.

வேப்பந்தாரணிந்தவிமலனையமணந்த வேந்தனான்பரைத்தினமுங்
காப்பவரென்றுதினமுமஞ்செழுத்தைக் கருதியேயாகமுமுடித்து
மாப்பெருந்தவர்க்குக்கழலிணைதந்த மாமணிச்சோதியே அருள்தா
காப்பியன்வணங்குமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 46

### சிறுத்தொண்டநாயனார்.

சாமவேதத்திற்பிரியமதான தானுவேயடியவர்தன்பால்
நேமமுவைத்துத்தினமமுதளித்த நேயரைவெகுவிதமிரட்டிக்
கோமளச்சேயைக்கொன்றமைத்தருளக் கொடுத்தவாயேழையைக்காப்பாய்
காமனைந்தகலுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 47

### கழற்றறிவார் நாயனார்.

விசமெனச்சகலபற்றுகள்விடுத்து விரிந்தகைத்தொளில்நிதமியற்றி
நிசமுறுமனத்தார்க்கரசினையளித்து நிருபமுமன்பர்பாலன்பும்
புசபலத்தொண்டர்தன்னுடன்கைலை புகவருள்செய்தவா அருள்தா
கசடுகெள்ளிங்குமத்தியபுரிவாழ் கர்த்தனேசேடயீசுரனே 48

### கணநாதநாயனார்,

அடிமைகளியற்றிவருமன்பர்தம்மை யடைந்தவர்தங்களுக்கெல்லாந்
திடந்தரும்நல்லதிருப்பணியியற்றச் செய்துநற்புனிதமாயெழுந்த
குடிமிசைவந்தார்க்கழலிணைமரவார்க் குதவியதயையெனக்கருள்தா
கடிமிகுத்திலங்குமத்தியபுரிவாழ் கர்த்தனேசேடயீசுரனே. 49

### கூற்றுவநாயனார்.

தொண்டர்பாலன்புமஞ்செழுத்ததனைத் துதிப்பதேநியமமாய்க்கொண்டு
எண்டிசைமுழுதுந்தன்னியல்பாக்கி யெந்தையந்தணர்களைவேண்ட
மண்டலமாழத்திருவடியளித்து மலர்ப்பதமீந்தவா அருள்தா
கண்டருள்பெற்றமத்தியபுரிவாழ் கர்த்தனேசேடயீசுரனே. 50

### பொய்யடிமையில்லாதபுலவர்.

ஆட்சிநம்மரனாரடியெனநினைந்து வாசுசேர்கவிமுதலாவுந்
தாட்சியிலாதுபெட்பொடுமொழிந்து தயவுளபலகைமேலிருந்து
மாட்சிமைபெற்றவடியரைக்காத்த வள்ளலேசிறியனுக்கருள்தா
காட்சிகள்மிகுந்தமததியபுரிவாழ் கர்த்தனேசேடயீசுரனே. 51

### புகழ்ச்சோழநாயனார்.

மதுவவிழ்தாரான்வையகமெல்லா மறனெறிதான்றழைத்தோங்கி
யதுபுகழாகவரசியற்றிடு நாளமைச்சனைவினவியோர்சமரி
விதுசடைமுடியென்றறிந்தழல்புக நல்லிணையடிதந்தவா அருள்தா
கதிவழிகாட்டுமத்தியபுரிவாழ் கர்த்தனேசேடயீசுரனே. 52

### நரசிங்கமுனையரையநாயனார்,

வெந்தநீறணிந்தார்க்காதிரைநாளில் விசேடமாம்பூசைகளியற்றி
வந்திமென்பர்க்கரும்பொருளுதவி வளமிலானணிந்தநீர்க்கிரட்டித்
தந்தனுப்பியநல்லன்பரைக்காத்த தயாபராசிறியனுக்கருள்தா
கந்துகஞ்சூழுமத்தியபுரிவாழ் கர்த்தனேசேடயீசுரனே. 53

### அதிபத்தநாயனார்.

அலைமிகுங்கடலிலனுதினமீன்கொள் வார்க்கரசானநல்லன்பர்
கலைமதியணிந்தார்க்கென்றொன்றுவிடுத்த கையரைமிடியினுட்படுத்தி
நலிவதில்மணிமீனிந்திடவிடுத்த நாளினிற்காத்தவா அருள்தா
கலிசமதிலங்குமத்தியபுரிவாழ் கர்த்தனேசேடயீசுரனே. 54

கலிக்கம்பநாயனார்.

அம்புவியதனிலடியர்பாற்பதித்த வாசையாலவரைமுன்னிறைஞ்சி
சம்புவையிறைஞ்சுமடிமையாளன்பர் தன்னெறிபூண்டில்லில்வரக்கண்
டம்மனைவிசுழக்கண்டித்துவணங்கு மன்பரைக்காத்தவா அருள்தா
கம்வளருஞ்சேருமத்தியபுரிவாழ் கர்த்தனேசேமயீசுரனே 55

கலியநாயனார்

பொருளினையியல்புமாக்கையினியலபும் பொய்யெனவுணர்ந்துயரிறைவ
னருளதுபெறனல்லாலயமெல்லா மளவிலாத்தீபங்கணிறைப்பார்
பெருமிலம்பாடால்கந்தரமரிகை பிடித்தருள்தந்தவா அருள்தா
கருவரிசிங்குமத்தியபுரிவாழ் கர்த்தனேசேமயீசுரனே 56

சத்திநாயனார்.

அந்தமுயிருநல்லடியவர்தமைக்கண் டஞ்சிடாதிருந்தவர்தம்மை
நிந்தையாம்நாக்கைத்தண்டத்தாலிசெய் விளங்கிடுஞ்சத்தியாலருப்பார்
சிந்தநற்றொண்டையியற்றினாதமக்குன் னிணையடிதந்தவா அருள்தா
கந்துவர்வணங்குமத்தியபுரிவாழ் கர்த்தனேசேமயீசுரனே, 57

ஐயடிகள் காடவர்கோனாயனார்

விரிந்தபாரனைத்துமரசியற்றிநல் வேந்தனுமருள்திரம்பெறவே
பரிவுடன்செய்க்குமணிமுடியிந்து பரமனூருரைதலமவணங்கி
பெருமைகண்மிகுவெண்பாவினிற்றுதிக்கப் பேரருள்தந்தவா அருள்தா
கரிமுகன்வணங்குமத்தியபுரிவாழ் கர்த்தனேசேமயீசுரனே. 58

கணம்புல்லநாயனார்.

கன்னிதிபதனூல்பெரும்பலன்வேத நாயகன்கழலிறைஞ்சுதலேன்
றிசனிலமதில்சிவாலயமிலங்க வியற்றுந்தீபத்தினால்வருமை
வுன்னியம்புல்லாலுயர்சிகைகொழுத்த வுயர்கதிதந்தவா அருள்தா
கன்னிதாழ்ந்திறைஞ்சுமத்தியபுரிவாழ் கர்த்தனேசேமயீசுரனே. 59

காரிநாயனார்.

தம்பெயராலோர்கோவையொன்றியற்றி தமிழின்நாட்டரசர்பாலியம்பிச்
செம்பொருள்பெற்றுமாலயமமைத்துஞ் சிவனடியார்களுக்குதவி
யம்பொனிறுயர்த்தவருள்மலைமரவா தடியவரைக்காத்தவா அருள்தா
கம்பலைநீங்குமத்தியபுரிவாழ் கர்த்தனேசேமயீசுரனே. 60

நின்றசீர்நெடுமாறநாயனார்.

மண்ணினிற்பொல்லாமலட்யாமமணர் வார்த்தையிற்றடக்குண்டுமனலவாய்
வெண்ணெய்போலாகும்வெதுப்பினிற்காழி வேந்தர்தாளடைந்தருளுயர்ந்து
மெண்ணிலாப்பணிகளியற்றினார்தமக்குன் னிணையடிதந்தவா அருள்தா
கண்ணன்சேய்வணங்குமத்தியபுரிவாழ் கர்த்தனேசேமயீசுரனே. 61

### வாயிலார்நாயனார்.

அலைந்திடுமனத்தையாக்கையாலயத்துள மரகலாகச்செப்பேரிருள்கள்
குலைந்திடஞானத்தீபமேற்றிக் கோதிலானந்தனீராட்டி
விலையறியாதஅமுதமும்படைத்த வேதனைக்கார்த்தவா அருள்தா
கலைமகள்சூழுமத்தியபுரிவாழ் கறதனேசேடயீசுரனே. 62

### முனையடுவார்நாயனார்.

தானமுந்தவமும்பத்தியுமுள்ளார் தன்னிடஞ்சமரினிற்றொல்வி
யானவர்வந்துவருள்பொருளீந்தா லவரெதிர்மன்னரைவென்று
போனசம்பொருளுமன்பருக்கீந்த புனிதனைக்கார்த்தவா அருள்தா
கானங்கள்பரமெத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசரனே. 63

### கழற்சிங்கநாயனார்.

பிரமிலாதெதிர்த்தவுத்தரதிசையார் வெருப்படையவராதிண்டோள்
மதமெலாமகற்றிமலரினைமுகர்ந்த மனையவள்குற்றத்தாலக்கரத்தைப்
பதைபதைத்தருத்தநேயனைக்கார்த்த பரமனேசிறியனுக்கருள்தா
கதலிகள்மிகுந்தமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 64

### இடங்கழிநாயனார்.

தாமதமின்றியாலயமெங்குந் தழைத்திடநித்தியபூசை
நேமமாயியற்றிக்கனகநற்சபைமேல் நின்றிலங்கிடப்பொன்னால்வேய்ந்து
சாமமுணர்ந்தவடியர்பாலன்பு தான்செயக்கார்த்தவா அருள்தா
காமதேன்வணங்குமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 65

### செருத்துணைநாயனார்.

மதியணியீசன்மலரடிமறவா மனத்தினராலயஞ்சென்று
விதிமுறைதவராதனுதினம்வணங்கும் வேளையிலங்கொருமாது
துதியினள்மலரைமுகர்ந்திடமூக்கைத் துணித்திடக்கார்த்தவா அருள்தா
கதிர்மகன்வணங்குமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 66

### புகழ்த்துணைநாயனார்.

பவமெனுமிருளைநீக்கிமெனத்தார் பதமலர்காடொரும்பூசை
தவரிடாதியற்றிவருமையின்மெலிவால் தளர்ந்துமஞ்சனக்குடம்வீழ்த்திக்
கவனமிலாதுவடியினிற்றுயில்க் கனகமீந்தாண்டவா அருள்தா
கௌதமன்வணங்குமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீரனே. 67

### கோட்புலிநாயனார்.

மாசிலாமனத்தார்பத்தியின்வழியால் மனையினிற்சென்னெலைக்கட்டி
நேசமாஞ்சுற்றமனையருக்களித்து நேர்ந்தபோர்வென்றிவர்செய்த
மாசறிந்தருத்துமகவினையரிய மலர்ப்பதந்தந்தவா அருள்தா
காசிபன்வணங்குமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே, 68

பத்தராய்ப்பணிவார்.

எவர்களாய்வரினுமன்பரென்றுரைக்கிலெங்கணாயகரெனநினைந்து
அவனியிற்சிரசுபடிந்திடப்பணிந்து வாசையோடவர்மொழிநயந்து
கவனமும்வாக்குங்காயமுமொன்றாய்க் கலந்திடக்கார்த்தவாஅருள்தா
கவிகளிரட்டுமத்தியபுரிவாழ் கற்தனேசேமயீசரனே. 69

பரமனையேபாடுவோர்.

வேந்தர்களெனினுமற்றெவரெனினும் வெறுத்திகபரமெலாம்விடுத்து
சாந்தபண்டிதராயமன்றினிலாடுந் தாளிணைநினைந்தரும்பிறவி
நீந்திடப்பரமன்பணைகளர்த்த நேயனேசிறியனுக்கருள்தா
காந்திகள்சூழுமத்தியபுரிவாழ் கற்தனேசேமயீசரனே. 70

சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்.

இடமதாய்மனத்தைப்புலன்பொறிமயக்கந் திருசதியேகாலினைபிழுத்து
மடருமாதாரவகைதுதிசெய்து மமுதமுண்டவத்தைகளகன்ற
நடமியபாதங்கண்டருச்சித்த நலத்தரைக்கார்த்தவாஅருள்தா
கடவுளர்சூழுமத்தியபுரிவாழ் கற்தனேசேமயீசரனே. 71

திருவாரூர்பிறந்தார்.

தயவொடுமேருட்செய்தநற்றவத்தால் தரணியிற்செனித்திட்முத்தி
இயபுளபதியிலிருப்பவரெல்லா மிங்ஙதமாகியகணமென்
றயர்வுளவடியார்க்கியம்பியுங்கார்த்த வுத்தமாசிறியனுக்கருள்தா
கயிருக்கிலங்குமத்தியபுரிவாழ் கற்தனேசேமயீசரனே. 72

முப்பொழுதுந்திருமேனிதீண்டுவோர்.

பாரிலாகமத்தின்முறைவழிதவிரப் பண்பராய்ககாலமுன்றினிலுங்
காரணமிகுமஞ்செழுத்தினையோதிக் கதியருள்பாதமர்ச்சித்து
நாரணனறியாவுருவினைத்தீண்டும் நலத்தரைக்கார்த்தவாஅருள்தா
காரிதாழ்ந்திறைஞ்சுமத்தியபுரிவாழ் கற்தனேசேமயீசரனே. 73

முழுநீறுபூசியமுனிவர்.

தாமதத்தியல்பைத்தகற்றிமெய்நீற்றின் தன்மையாலெத்தனுதினமும்
நேமமாயணிந்தமுனிவரைக்கார்த்த நிமலனேமாதுலர்க்கஞ்சுஞ்
சோமனைக்கார்த்தசுந்தரஞானச்சொருபனேயேழையைக்கார்ப்பாய்
காமன்சூழ்ந்திறைஞ்சுமத்தியபுரிவாழ் கற்தனேசேமயீசரனே. 74

அப்பாலுமடிசார்ந்தார்.

தனயிருவேந்தர்மூவர்கள்றொடு தன்னிலும்புரத்திலுஞ்சேர்ந்த
அனைவர்கள்தொண்டர்தொகைக்குமுன்பின்னு மடைந்தவர்தங்களைக்கார்க்க
மனமுளதேவேயேழைமேற்கிருபை வைத்துமோட்சிப்பதென்றன்
கனந்திருசூழுமத்தியபுரிவாழ் கற்தனேசேமயீசரனே. 75

பூசலநாயனார்.
பாதகமகற்றுமன்பர்கள்தமக்குப் பரிவொடுவேண்டுவதளித்துக்
கோதிலாலயந்தனுளமதிலமைத்த குணமிகுமாலையமதனை
நீதியாமரசர்க்குறைத்தருள்புரிந்த நேயனேசிறியனுக்கருள்தா
காதகன்னேகுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 76

மங்கையர்க்கரசியார்.
கோவிதிதவராப்படியரசியற்றுங் குணமிகுவழுதியர்க்கிசைந்த
தேவியாமெனவேதொண்டர்வாக்கமைந்த தெள்ளியவன்பினள்சைவ
மாவிதியெங்குநிலைறந்திடச்செய்த மங்கையைக்காத்தவா அருள்தா
காவிதிகுழுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 77

நேசநாயனார்.
அரகராவென்றுமடியர்பால்வைத்த வாசையாலவர்நிதமணியச்
சரமெனக்கீளும்வஸ்திரங்குடையுந் தந்தவர்மனமதுமகிழப்
பரவியதொண்டர்க்கருளதுபுரிந்த பரமனேசிறியனுக்கருள்தா
காடையடக்குமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 78

கோட்செங்கட்சோழநாயனார்.
அண்டர்கள்சூழுமானைக்காவதனி லன்புடன்செய்தநற்றவத்தால்
தெண்டிரைசூழும்புவியெலாமரசு தெளிவுறவியற்றியுமன்பால்
பண்டறிந்துயர்ந்தபலபணிஇயற்றப் பாகதிதந்தவா அருள்தா
கண்டிகைசூழுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 79

திருநீலக்கண்டயாழ்ப்பாணநாயனார்.
ஆணவமகற்றுமிசையினைப்பாடு மன்புளார்க்காழியினரசைக்
காணவானந்தமுற்றவர்தமிழைக் கருதியேநிதமாவாமல்
வீணையிலிசைத்துமன்றலிற்கலந்த வேந்தனுக்கருளியபாதங்
காணவுந்தயைசெய்மத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 80

சடையனுயரிசைஞானியார்.
எத்திசையோற்குமிருளினையகற்ற வெழுந்திடுஞானபானனெனவும்
வித்தகன்றோளனென்னவும்பாரில் விழங்கியவானந்தவுருவைப்
பெத்ததாய்தந்தைதங்களுக்கீந்த பேருள்யேழையேற்கருள்வாய்
கத்திகைசூழுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 81

திருவிளையாடற்புராணச்சரிதை.
ஆர்ப்பரித்தெழுந்தவரைசிறகரிந்தோ னரும்பழியகற்றிவெள்ளானை
யோர்த்தருஞ்சாபம்நீக்கியும்வழுதிக் கியம்பியுங்கனவின்கண்ணாகரம்
மார்ப்பெருந்தழலினுதித்தபார்ப்பதியை மணந்துலகாவையுநிழற்கிழ்
கார்த்தவாயெனைக்கார்மத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசுரனே. 82

ஆணவமகற்றுமிருடியர்க்காண வம்பலத்தாடியுந்தறட்குச்
சாணகடனில்வடவையைப்புகட்டித் தனிபவோதனந்நியமைத்துங்
காணவுமரியவெழுகடல்வழுதிக் காஞ்சனைமூழ்கியவருளைக
காணவுந்தயைசெய்மத்தியபுரிவாழ் கற்தனேசேடயிசரனே 83

திருவுலவின்றவன்வேயினகட்டில் சென்னித்தருள்மைந்தர்க்குமகுடம்
பொருவையோடக்கும்வேள்வனைசெண்டு பேர்யிருகடலிந்தரன்மையின்
வெருவமதடக்குமென்றருள்செய்த கிருபையைக்காண்பதென்றுமோ
கருதுமேவார்குழுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயிசரனே. 84

பண்மிருவேதப்பொருளிருடியற்குப் பகர்ந்துநன்மாணிக்கம்விற்றுந்
திண்புயவருணன்விடுங்கடல்பொடித்துச் செல்விற்குகூடயதாகி
விண்ணவர்புகழச்சித்தராய்நடித்த விமலனேசிறியனுக்கருள்தா
கண்ணிமையென்னுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயிசரனே. 85

வழுதியுமகிழக்கல்லின்வேழத்தை வளர்கன்னலருந்தியுஞ்சமணப்
பழுதர்கள்விடுத்தகரிவென்றுகொளவுரி பதநியால்மூவுருவாகி
தொழுதிமேசன்காணககான்மாரித்தொடர்பழிதீர்த்தவா அருள்தா
கழுதுகள்பாடுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயிசரனே. 86

பாலனுக்கொடியமறையவன்செய்த பாதகந்தவிர்த்தங்கம்வெட்டி
ஆலமதுமிழும்நாகமெய்து யானைநந்தியார்ப்பொடித்து
மேலதாமெய்யைக்காட்டியுமுலவாய் வேந்தனுக்கீந்தவா அருள்தா
காலனையுதைத்தமத்தியபுரிவாழ் கற்தனேசேடயிசரனே. 87

நன்னயவணிசர்மாதர்கள்மகிழ நல்வளைபகர்ந்தட்டசித்தி
வுன்னியபெண்கட்குதவியுஞ்சினையிலுயர்விடைவைத்திடச்செய்து
மன்னன்மாசேனைதனக்குநீர்தந்து வாதமுஞ்செய்தவா அருள்தா
கன்னல்முந்திணுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயிசரனே. 88

சோழனைமடுவில்வீழ்த்தியுமன்பர் துயரறக்கோட்டையுமுதவி
வாழவுதிமாமனுய்வகது வாழ்வுயர்சிவபதிகாட்டி
யாழிசைப்பாணுல்விறகினைவிற்ற வையனேசிறியனுக்கருள்தா
காழகமிருந்தமத்தியபுரிவாழ் கற்தனேசேடயிசரனே. 89

இன்னிலம்புகழச்சோலன்றனக்கு வியல்புள திருமுகமனுப்பி
நன்னயமிகவேபலகையுமீந்து நாரிபாலுறுவழக்கொழித்து
மன்னையாய்க்கேழல்க்கருமுலையீந்து மமைச்சனுக்கியதயையருள்வாய்
கன்னல்தேன்சொரியுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசரனே. 90

அற்பமாங்கரியகுருவிதன்செவியி லரும்பொருளுரைத்துநாரைக்கு
நற்பதமீந்துமாசனுவேண்ட நகரினைப்பணியதால்காட்டி
விற்பனைப்பேரம்பேய்துயர்பலகை வேண்டுவோர்க்கீந்தவாயருள்தா
கற்பவர்குழுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசரனே. 91

கொங்குநேர்வாழ்க்கையெனக்கவிசெப்பிக் கோதிலாப்பொற்கிளியழித்தச்
சங்கைசெய்கிரனறனைமேயிழ்த்தத் தயைசெய்துகரையின்மேலழைத்து
மிங்கிதம்பெறறானுணாததியுங்கலக மிடுவதைதீர்த்தவா அருள்தா
கங்கையும்பணியுமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசரனே. 92

அருள்மிகுகாடன்பிணக்கினைத்தீர்த்து மழருயர்வலைகொடுவிசி
திருவளர்வாதவூரர்பாலன்பு செய்துபதேசமுஞ்செப்பிக்
ஒருபையால்நரியைப்பரியதாய்ச்செய்த கிருபைபாலிப்பதென்றுளோ
கருணிகர்குழுமத்தியபுரிவாழ் கற்நனேசேடயீசரனே. 93

விற்பனநரியைப்பரியதாய்ச்செய்தும் வேதன்மாலறிந்திடாமுடிமே
லற்பமண்சுமந்துமூதியள்பாலுற்றவன்பிட்டினைநுகர்ந்துஞ்
சற்பனைபேசிவழுதிகையப்பிரம்பால்தானடியோர்ததவா அருள்தா
கற்பகமலர்சூழ்மத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசரனே. 94

பாண்டியன்சுரத்தையகற்றியும்பொல்லாப் பாவிகள்தனைக்களுவேற்றி
வேண்டினள்தனக்குவனனியுங்கிணறு மேலதாமிலிங்கமுமுதவி
தாண்டவமிதொளருச்சனைபுரிந்தோர் தங்களைக்கார்த்தவா அருள்தா
காண்டிபாவணங்குமத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசரனே. 95

சதாசிதமுனதுதாளிணைநினைந்து சரணமென்றிருகரங்கூப்பிப்
பதாம்புயமறிந்தோர்பதமலர்நினைந்து பத்திசெய்தொழுகுமாறறியேன்
விதானமுமபுரியவையறியாத வீணனைகார்ப்பதெனுளோ
சதாசிமிருந்தமததியபுரிவாழ் கற்தனேசேடயீசரனே. 96

சொற்பழுதில்லாவடியர்கண்மொழிந்த சுருதியையேற்றநற்செவியி
லற்பனுறுரைக்குபுன்மொழிகொள்ள லரிதரிதெனவயர்மனத்தா
னுறபவமொழிதருவயர்கதைபெறவே யூழ்வினைபோக்குநாளெதுவோ
கற்புடையார்சூழ்மத்தியபுரிவாழ் கற்தனேசேடயீசரனே. 97

மலையினிற்சென் றம்மனைத் திடைவின்ற மனம்பொறிபுலனெலாமொடுக்கி
கலையெனயின் றவருந்தவப்புரிந்தோர் சேவித்தபதமலரதனைக்
குலைமுதலான வுற்செய்கைசெய்யுங் கொடியனுங்காண்பதென் றுளோ
கலைருநித்தாயபத்தியபுரிவாழ் சுத்தனேசேடியீசுரனே. 98

பாசமாமிருளிற்படிந்துநானிலையும் பாடெலாங்கண்டவர்கேட்டோர்
நேசவருணதுமனமதுகல்லா வேறைகட்குதவியேகாக்கும்
நேசமும்பொய்யாப்பாவியைக்காப்பாய் நித்தனேசமயமிதய்யா
காசினியோர்க்கும்மத்தியபுரிவாழ் சுத்தனேசேடியீசுரனே. 99

கமலநேர்வதனக்கன்னியர்தனது காதலேநீக்கியின்பாதக்
கமலமேகாணத்தயைசெய்வாய் ஞானக்கதிரொளிவீசுசெஞ்சுடரே
கமலநான்முகனுமகரியமேனியனுங் காணொணுவானந்தவொளியே
கமலேசின்தடத்துமுத்தியபுரிவாழ் சுத்தனேசேடியீசுரனே. 100

வேதமும்வாழி சைவதிருமுறை நிதமும்வாழி
மாதவர்முனிவர்வாழி மறுநெறி தழைத்துவாழி
பூதலமிகவும்வாழி புண்ணிய ரன்பர்வாழி
ஆதிசேடீசர்மாலை அநுதினம் வாழிதானே.

சேடியீசுர மாலை.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.